உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

தில்லைவளாகம் என்கிற

# ஆதிசிதம்பர மான்மியம்



ACC. NO. 26035
265 79/3

''தென்னாடுடைய சிவனே போற்றி
எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி''

மூன்றாம் பதிப்பு

பெரி. நா. நா. அ. தேவராஜன் செட்டியார்

1984

79/3

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# தில்லைவளாகம் என்கிற
# ஆதி சிதம்பர மான்மியம்



ஆக்கியோர் :

சைவசித்தாந்தப் பெரும்புலவர் சிவபூசைச் செல்வர்,
இராம செ. சொக்கலிங்க ஐயா அவர்கள்



காரைக்குடி க. முத்துப்பட்டணம்

பெரி. நா. நா. அ. தேவராஜன் செட்டியார்

மூத்த புதல்வன்

## திரு. தேவ. நாராயணன் - உண்ணாமுலை

சாந்தியின் நினைவாக
வெளியிடப் பெற்றது

இரக்தாட்சி ஞு புரட்டாசி மீ 22 உ (8-10-84)

சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# வாழ்த்துரை

## சிவஸ்ரீ தத்புருஷதேசிகர் அவர்கள், தேவகோட்டை

சைவசமயக் குரவர்களாகிய சமயாச் சாரியர்களால் பதிகங்களும் பாடல்களும் பெற்ற திருத்தலங்கள் சோழநாட்டில் மிகுதியாக உண்டு. இப்போது நமக்குக் கிடைத்திருக்கும் திருப்பதிகப் பாடல்களில் குறிக்கப் பெறுவன அன்றி மறைந்து போன திருப் பதிகப் பாடல்களிலும் பல திருத்தலங்கள் குறிக்கப் பெற்றிருத்தல் கூடும். அவற்றை இப்போதைய காட்சி யில் பழமை நிலவுவது கொண்டு ஒருவாறு தெளியலாம். அப்படித் தெளிவு கொள்ளத்தக்கத் திருத்தலங்களுள் ஒன்று தில்லைவளாகம்.

இத்திருத்தலம் 'ஆதிசிதம்பரம்' என்று புராணத் தில் குறிக்கப் பெற்றுள்ளது. கூத்தப் பெருமான் முதற் படைப்புக்கு இத் திருத்தலத்தில்தான் திருவுளம் கொண்டார் என்று பழைய நூல்கள் கூறுகின்றன. இத் திருத்தலத்திலுள்ள திருக்கோயில் காரைக்குடி முத்துப் பட்டணம் பெரி. நா. நா. குடும்பத்தாரால் திருப்பணி செய்யப்பெற்று, சென்ற 1922ஆம் ஆண்டில் குடமுழுக்கு விழா செய்யப் பெற்றது. திருக்கோயிலில் எழுந்தருளி இருக்கும் திருவுருவங்கள் மிகப் பழமையானவை. அவைகள் திருக்கோயிலை அடுத்துள்ள 'அம்பலக் குளத் திலிருந்தும்' அதையடுத்துள்ள பூமிக்கு அடியிலும்

கிடைத்தவை. நடராசப் பெருமானது திருவுருவம் தென்னாட்டுத் திருக்கோயில்களில் உள்ள எல்லாத் திருவுருவங்களை விடச் சிறப்பானது.

இத் திருத்தலத்திற்கு வந்து இராமபிரான் வழிபாடுசெய்து இதனை அவரது அபிமானத் திருத் தலமாகக் கொண்டிருக்கிறார். இதை இராமபிரானது திருவுருவங்கள் அனைத்திலும் சிறந்த ஒரு திருவுருவம் இத் திருத்தலத்தில் பூமிக்கடியில் கிடைத்துப் பிரதிட்டை செய்து வழிபாட்டில் இருப்பது கொண்டு தெளிந்து கொள்ளலாம்

பதினெண் புராணங்களுள் 'சைவ புராணம்' பத்து. அவற்றுள் பிரமாண்டபுராணம் நிலவுலகத்திலுள்ள சிவ க்ஷேத்திரங்களின் சிறப்பை விளக்குவது. அதில் தில்லை வளாகமான்மியம் விரிவாயிருப்பதைத் திருப்பணியாளர் களின் வேண்டுகோட்கு இணங்கிக் காரைக்குடி முத்துப் பட்டணம் சைவசித்தாந்தச் செல்வர் இராம. சொ. சொக்கலிங்க ஐயா அவர்கள் சுருக்கமாக மொழி பெயர்த்துத் 'தில்லை வளாகம் நடேசர் பதிகம்' என ஒரு தோத்திரநூல் இயற்றி அதனுடன் சேர்த்து முன்னர் வெளியிட்டிருக்கிறார்கள்.

அதற்கு மறு பதிப்பின் இன்றியமையாமை கருதி இப்போது ஷை பெரி. நா. நா. குடும்பத்தைச் சார்ந்தவர் களும், சமய, விசேடதிட்சைகளைப் பெற்றுச் சிவபூசை செய்து வருகிறவர்களும் ஆகிய தேவராசன் செட்டியார்.

அவர்கள் தமது மூத்தபுதல்வர் திரு. தேவ. நாராயணன் அவர்களின் அறுபதாம் ஆண்டு நிறைவு மணிவிழா நினைவாக இதை வெளியிடுகிறார்கள். சிவநேசச் செல்வர்கள் படித்துப்பயன் அடைவார்களாக.

இதனை வெளியிட்டுதவிய திரு. தேவராசன் செட்டியார் அவர்களது மனைவி, மக்கள் சுற்றம், நட்பினர்களுக்கு எல்லா வளங்களும் மென்மேலும் நிறைய ஆலவாயண்ணல் திருவடிகளைச் சிந்திக் கின்றோம்.

நலமே தழைக!

# பதிப்புரை

தில்லைவளாகம் (ஆதி சிதம்பரம்) என்னும் திருத்தலம் மிகப் பழம்பெருமை வாய்ந்தது. இத்திருத்தலம் உலகம் தோன்றுவதற்கு முதற்காரணமாக உள்ளது. உலகத் தோற்றத்திற்கு ஏதுவாக உள்ள படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்னும் ஐம்பெரும் செயலையும் நடாத்தும் பஞ்ச கிருத்திய தாண்டவத்தை உலக முதல்வனாகிய சிவபெருமான் சத்தியாகிற சிவகாமி அம்மையுடன் செய்தருளினார். அவருடைய நடனத்தாலேயே உலகம் இயங்குகின்றது. ''ஆட்டுவித்தால் யாரொருவர் ஆடாதாரே" என்று அப்பர் பெருமானும் அருள்வாக்கு அளித்துள்ளார். 'அவன் அசையாமல் அணு அசையாது' என்பது முதுமொழி. இம்முறையின் விளக்கமே நடராசப் பெருமானின் இயற்கைத் தத்துவம்.

''தோற்றம் துடிஅதனில் தோயும்திதி அமைப்பில்
சாற்றியிடு மங்கியிலே சங்காரம்
ஊன்று மலர்ப்பதத்தே உற்ற திரோதமுத்தி
நான்ற மலர்ப்பதத்தே நாடு''

என்றார் பாவலரும். இவ்விளக்கம் இந்நூலில் குறிப்பிடத்தக்கதாகும்.

இப்பதிகப் பாடல்களையும், விநாயகர்துதி, சிதம்பரேசுரர்துதி, இராமர்துதி ஆகிய பாடல்களையும் காரைக்குடி க. முத்துப் பட்டணம் சைவசித்தாந்த வித்தகர் ராம. சொ. சொக்கலிங்க ஐயா அவர்கள் பக்திநனி சொட்டச் சொட்டப் பாடியுள்ளார்கள். அவர்கள் அனுபவச் செய்யுள் திறத்துக்குத் திருவிசைப் பாவில் கருவூர்த் தேவர் 'திருமுகத்தலை' என்ற திருத் தலத்தில் பாடியுள்ள

"என்னையுன் பாத பங்கயம் பணிவித்து
என்பெலாம் உருக நீ எளிவந்து

உன்னை என்பால் வைத்து எங்கும் எஞ்ஞான்றும்
ஒழிவற நிறைந்த ஒண் சுடரே

முன்னை யென்பாசம் முழுவதும் அகல
முகத்தலை அகத்து அமர்ந்து எனக்கே

கன்னலும் பாலும் தேனும் ஆரமுதும்
கனியுமாய் இனியை ஆயினையே"

என்ற இப்பாடலுக்கு இணையாகச் சொக்கலிங்க ஐயா அவர்கள் பாடிய நடேசர் பதிகத்தில்

"கற்பகமோ முக்கனியோ தெளிசெந் தேனோ
கற்கண்டோ சர்க்கரையோ கருப்பஞ் சாறோ
அற்புதமோ பொற்பதமோ அமிழ்தம் தானோ
ஆனந்தா தீதமோ அருட்பெ ருக்கோ

தத்பதமோ சித்பதமோ அனந்த பானுத்
தனியுருவோ எனமுனிவர் சார்ந்து போற்ற
நற்பதம்ஆர் தில்லைவளா கத்தில் மேவு
நடராசன் திருவடிகள் நமந்து வாழ்வாம்"
(நமந்து—நமஸ்கரித்து - வணங்கி)

இவ்வாறு அனுபவித்திருக்கிருர்கள் இத்திருத்தலம் இப்போது சிதம்பரம் என்று வழங்கப் பெறும் தலத்தில் கூத்தப்பெருமான் சபையும் கோவிந்தராசப் பெருமான் சன்னதியும் அமைந்திருப்பது போல ஆதிசிதம்பரம் என்று கருதப் பெறும் இத்தில்லைவளாகத்தில் கூத்தப் பெருமான் சன்னதியும் - இராமர் சன்னதியும் அமைந் திருப்பதே சான்ருகும். இத்திருத்தலத்தில் இராமர் முதலான திருவுருவ மூர்த்திகள் பூமியிலிருந்து 1862ல் எடுக்கப் பெற்று அதே இடத்தில் பிரதிட்டை செய்து திருக்கோயிலாக விளங்குகின்றது. கூத்தப் பெருமான் திருவுருவம், சிவகாமி அம்பிகையின் திருவுருவம் ஆகியவை நடராசர் கோவிலுக்குத் தென் கீழ்த்திசையில் அம்பலக்குளம் என்ற குளக்கரை மேட்டில் விரோதி ௵ மார்கழி ௴ 28ல் பூமியில் இருந்து எடுக்கப் பெற்றவை யாகும். இந்த நடராசர் கோயில் திருப்பணியைச் செய்து எனது பாட்டனுர் திரு. பெரி. நா நா. நாராயணன் செட்டியார் அவர்கள் துந்துபி ஆண்டு சித்திரை மாதம் 21 ம் நாள் குடமுழுக்குச் செய்வித்தார்கள். எனது தந்தையார் திரு பெரி. நா. நா. அ. அண்ணுமலை செட்டி யார் அவர்களும் பாட்டனுருக்கு உறுதுணையாக இருந்து

திருப்பணியில் பங்கு கொண்டார்கள். இத்திருக் கோயில் நிருவாகத்தை, எங்கள் பெரி. நா. நா. குடும்பத்தினர் தொடர்ந்து பார்த்து வருகின்றோம்.

இத்திருத்தலம் தில்லைவளாகம் என்ற புகைவண்டி நிலையத்தினின்று மூன்று கி. மீ. தூரத்தில் உள்ளது. முத்துப்பேட்டையிலிருந்து 10 கி. மீ. தூரத்தில் உள்ளது இத்தலத்தை அடைய பட்டுக்கோட்டை வாய்மேடு, வேதாரணியம் வழிப்பேருந்துகள் மூலமாகத் தில்லை வளாகம் கோயிலடி என்ற இடத்தில் இறங்க வேண்டும்.

இந்நூலின் முதற்பதிப்பு என் பாட்டனாராகிய திரு பெரி. நா. நா. நாராயணன் செட்டியார் அவர்களால் 1912 லும், இரண்டாம் பதிப்பு எனது பெரியதந்தையார் மகனை திரு பெரி. நா. நா. மெ. கண்ணப்ப செட்டியார் அவர்களால் 1938 லும் வெளி யிடப் பெற்றது.

இப்பொழுது மூன்றும் பதிப்பாக எனது மூத்த புதல்வன் தேவ. நாராயணன் சாந்தி நினைவாக இரக்தாட்சி ஆண்டு புரட்டாசித் திங்கள் 22 ஆம் நாள் 8—10—1984 ல் வெளிவருகின்றது.

இம்மூன்றும்பதிப்பிற்கு வாழ்த்துரை வழங்கியருளிய தேவகோட்டை, சிவஸ்ரீ தத்புருஷ தேசிகர் அவர்களுக் கும், இப்பதிப்புக்கு உறுதுணையாக இருந்து என்னுடன் ஒத்துழைத்த புலவர், திரு. வை. சு. ஆறுமுகம் அவர்

களுக்கும், நல்லமுறையில் அச்சிட்டுத் தந்த சௌத் இந்தியா பிரஸ் வீர. சுப்பையா அவர்களுக்கும் என் உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். அன்பர்கள் இந்நூலைப் படித்துப் பயன் பெறுவதோடு இத்திருத்தலத்திற்கு வந்து வழிபாடு செய்து நடராசப் பெருமான்—இராமர் பெருமான் திருவருளைப் பெற்று உய்யுமாறு கேட்டுக் கொள்கின்றேன்.

இன்னணம்

பெரி. நா. நா. அ. தேவராஜன் செட்டியார்
(சத்யோஜாதம்)

(க) முத்துப்பட்டணம். காரைக்குடி
8—10—84

உ

சிவமயம்

## விநாயகர் துதி

சீர்ஏறு பிரணவகுஞ் சரமாகிச்
சிவக்கொழுந்து செல்வான் கண்டு
நார்ஏறு சிவைஆங்குஅப் பிடியாகி
மருவவரு நால்வாய் அன்பர்
சூர்ஏறும் அஞர்தொலைத்துச் சுதையேறும்
மருப்புஏந்தித் தொல்லை ஞாலம்
ஏர்ஏறு மாதில்லை வளாகம் ஏறு
ஏரம்பன் இணைத்தாள் போற்றி.

நல்லஅருள் தலைமையுறும் இராமனும் சீ
தையும் நடன இராசா வுந்தன்
இல்லவளாம் தன்தாயும் இம்பர் வெளி
வந்தருள எண்ணி எந்தாய்
தில்லைவளா கம்ஆதி சிதம்பரம்யாம்
முன்போலச் செல்வோம் என்னும்
சொல்லின்அமு(து) எழுந்தாற்போல் எழுந்து
அவரோ(டு)
எழுந்துதிக்கைச் சுமுகா போற்றி.

## சிதம்பரேசுவரர் துதி

பொன்மானும் சொல்மானும் கண்மைபெற
அலைநஞ்சம் புசித்(து)ஒண் கண்டத்(து)
அல்மானும் படிவைத்திட்(டு) உமைகண்ணே
ஒள்மானும் அங்கை ஏந்திச்
செல்மானும் குழல்மலைமான் உலகு(உ)யிர்கள்
உய்ந்திடுமா சேவை கொள்ளத்
தன்மானும் நடம்நவிலும் ஆதிசிதம்
பரப்பெருமான் தாள்கள் போற்றி.

## இராமர் துதி

அத்திரம் ஒன்(று) எய்துதச முகனூர்தம்
உயிர்கவர்தல் ஆதி யால்நேர்
அத்திபல பலதனிகள் சென்றுகழித்(து)
எஞ்ஞான்றும் அமர்வான் வேண்டிப்
பத்திரசம் மலிந்தொழுக ஆதிசிதம்
பரநாதன் பரவி வைகும்
பந்(து) இரதன் தரும்மதலை பதுமமலர்
புரையும்அடி பணிந்து வாழ்வாம்.

# நடேசர் பதிகம்

பூமகனும் மாதவனும் மறைகள் நான்கும்
புணர்(வு) அரிய நிலைநின்றும் போந்திட்(டு) அன்பர்
தாம்எளிதின் இருவிழியால் பெறு(பேறு) இந்தத்
தனியுருவின் தரிசனமே தகும்ஈ(து) அன்றோ
தோம் அகல் இன்(பு) எனக்(கு)அளிப்பக் கோம ளாங்க
சுந்தரப்பேர் அருள்உருவாய்ப் புவியில் தோன்றி
நாமருசீர்த் தில்லைவளா கத்தில் மேவு
நடராசன் திருவடிகள் நமந்து வாழ்வாம். 1

தேவர்எலாம் எம்உல(கு)என் பெறுமால் இந்தத்
திவ்வியதே சோமயமாய்த் திகழா நின்ற
பாவனமா ரூபதரன் அமர்ந்து வாழப்
பயில்தவஞ்செய் வியன்நகர்இப் பதியே அன்றோ
தா(வு) அரிய தத்துவா தீதம் ஆய
தனிநகர் என்(று) அனவரதஞ் சார்ந்து போற்றும்
நாவலர்சீர்த் தில்லைவளா கத்தில் மேவு
நடராசன் திருவடிகள் நமந்து வாழ்வாம். 2

ஆரணமே தில்லைவளா கம்தான் ஆகும்
அதன்முடியாம் உபநிடதம் அதன்கண் மேய
சீர்அணவுஞ் சிற்சபையாம் அதனில் யேன்மைச்
சிவாகமத்தின் தெளிபொருளே திரண்ட(து) இந்த
ஏர்அணவுந் திருவுருஎன் (று) அடைந்து கண்டோர்
எய்தரிய மகிழ்ச்சியொடும் இறைஞ்சி ஏத்த
நார்அணவுந் தில்லைவளா கத்தில் மேவு
நடராசன் திருவடிகள் நமந்து வாழ்வாம். 3

கற்பகமோ முக்கனியோ தெளிசெந் தேனே
 கற்கண்டோ சர்க்கரையோ கருப்பஞ் சாறே
அற்புதமோ பொற்பதமோ அமிழ்தம் தானே
 ஆனந்தா தீதமோ அருட்பெ ருக்கோ
தத்பதமோ சித்பதமோ அனந்த பானுத்
 தனியுருவோ எனமுனிவர் சார்ந்து போற்ற
நற்பதம்ஆர் தில்லைவளா கத்தில் மேவு
 நடராசன் திருவடிகள் நமந்து வாழ்வாம். 4

குலமறையும் தொடர்(வு)அரிதாய் அகண்டம் ஆகிக்
 குறிக்கவரு நெறிக்(கு)அயலாய்க் கோதுஇ லாத
நிலைமையுறும் அரும்பொருளேநீஇப் பாரில்
 நிலம்அகழும் தொழிலினரும் நேர்ந்து காணும்
தலைமையுற எளிதுவெளி வந்த(து) என்னே
 சாற்று(க)என அமரர்எலாம் சார்ந்து போற்ற
நலம்மிகுசீர்த் தில்லைவளா கத்தில் மேவு
 நடராசன் திருவடிகள் நமந்து வாழ்வாம். 5

குன்(று)இருநான்(கு) இருபாலின் நிரைய வாகக்
 கொண்(டு)அனைய எண்தோளான் குணம்எட்(டு)
 உள்ளான்
வென்றிதரும் மால்விடையான் உடைபுன் தோலான்
 வேணிமதி பாணிபுனை விமலன் செம்பொன்
மன்றில்நடம் குயிற்றுறுகுஞ் சிதப்பொன் தாளான்
 மாதேவன் என்(று)எவரும் வழுத்தி ஏத்த
நன்றிதரு தில்லைவளா கத்தில் மேவு
 நடராசன் திருவடிகள் நமந்து வாழ்வாம். 6

இமயமலை உதவுசுதை உலக மாதா
  இலங்குசிவ காமிஎன்றும் இடப்பால் மேவி
அமைவரும்ஆ னந்தம்நிறை கடலில் மூழ்கி
  ஆருயிர்கள் பவரோகம் அகன்(று)இன்பு ஆரக்
கமைவுறநேர் காணஅருள் தொழில் ஐந்(து) ஆய
  கவின்கொள்திரு நடம்புரியும் கமல பாதன்
நமைஅருளும் தில்லைவளா கத்தில் மேவு
  நடராசன் திருவடிகள் நமந்து வாழ்வாம். 7

ஆதரம்ஓர் சிறிதும்இலேன் அன்(பு)இ லாதேன்
  அழுக்காறு வஞ்சம்முதல் அனைத்தும் உள்ளேன்
காதரமா பாதகன்வெவ் வினையன் தீயேன்
  கடியகுணக் களஞ்சியமே கடுக்க நின்றேன்
ஆதலினால் உறுதுணை ஒன்(று) இல்லை எந்தாய்
  அளித்திஎன வழுத்தும் எனச(கு)அருளும் மேலோன்
நாதகுசீர்த் தில்லைவளா கத்தில் மேவு
  நடராசன் திருவடிகள் நமந்து வாழ்வாம். 8

அல்ஆரும் மிடற்றானே உமையோர் பாகா
  அருட்கடலே இருட்கடலில் அமிழ்ந்து நாயேன்
கல்லாதேன் பொல்லாதேன் கருத்துஒன்(று)இல்லேன்
  கண்ணுதலே எண்ணுதல்நின் கடன்என்(று) ஏத்த
வில்ஆரும் நெறிஅருளிச் செல்ஆர் சோலை
  விண்முகட்டை ஊடுருவி மேற்சென்(று) ஓங்கும்
நல்லார்சூழ் தில்லைவளா கத்தில் மேவு
  நடராசன் திருவடிகள் நமந்து வாழ்வாம். 9

கவின்இலகும் மணிமிடற்றான் கைக்கொள் சூலி
கனம்இலகும் திருச்சடையான் கருணை வாரி
சிவைமகிழும் திருநடஞ்செய் செம்பொன் பாத
திவ்யகுஞ் சிதமலரைச் செங்கை காட்டி
அவரவருக்(கு) அருளும்நிலை தெரிக்கும் மேலோன்
அகிலம்எலாம் உள்புறம்பில் அமைந்து நின்று
நமைஅறுசீர்த் தில்லைவளா கத்தில் மேவு
நடராசன் திருவடிகள் நமந்து வாழ்வாம். 10

திருச்சிற்றம்பலம்

---

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

## தில்லை வளாகம் என்னும் ஆதிசிதம்பர மான்மியம்

இது பிரமாண்ட புராணம் க்ஷேத்திர வைபவ கண்டத்துள் பிரம—நாரத சம்வாதத்தில் உள்ள ஐந்து அத்தியாயங்களைச் சுருக்கி மொழிபெயர்க்கப் பெற்றது.

ஸ்ரீ காசித் திருத்தலத்தில் கங்கைக்கரையில் உள்ள அசுவமேத மண்டபத்தில் ஸ்ரீ சூதமுனிவர் எழுந்தருளி இருந்தபோது சனகர் முதலிய முனிவர்கள் பலர் அவரை வணங்கி ''முனிவர் ஏறே! தேவரீரது திருவாக்கிலிருந்து பெருகிவருகின்ற சிவபுராண அமுதத்தை அடியேங்கள் அடிக்கடிப் பருகிவருகின்றோம். ஆயினும் அது தெவிட்டவில்லை. இன்னும் இந்நிலவுலகத்தில் இம்மை மறுமை நலங்களை வழங்குவதும், துன்ப நீக்கத்தை நல்குவதும் பரம்பொருளாகிய சிவ பெருமானால் பெரிதும் விரும்பப்படுவது மாகிய திருத்தலம் ஒன்றின் சிறப்பை இன்று தேவரீரிடம் கேட்க விரும்புகின்றோம்'' என்று விண்ணப்பித்தார்கள். சூதமுனிவர் பரமசிவத்தையும் பதினெண்புராண ஆசிரியராகிய வியாசமுனிவரையும் தியானித்துச் சொல்லத் தொடங்கினார்.

''முனிவர்களே! முன்னொரு காலத்தில் நாரத முனிவர் நான்முகக் கடவுளை அடைந்து வணங்கி, 'ஐயனே! என்தவம் இடையூறு இன்றி நிறைவேறு

வதற்குரிய சிறந்த திருத்தலம் ஒன்றைச் சொல்லியருள வேண்டும்' என்று விண்ணப்பிக்க, நான்முகன் "முனிவனே பாரதநாட்டில் தென்திசையில் வில்வவனம் என்னும் திருத்தருப்பூண்டிக்குத் தெற்கிலும், இடும்பா வனத்திற்கு மேற்கிலும், திரு உசாத்தானத்திற்குக் கிழக்கிலும், திருக்களருக்கு வடக்கிலும் தில்லை மரங்களால் சூழபபெற்ற 'தில்லைவளாகம்' என்னும் ஒரு திருத்தலம் இருக்கிறது. இது தன்னை அடைந்தவர்களுக்கு வெகு விரைவில் போக மோட்சங்களைத் தருவது. அகத்தியர் முதலிய முனிவரர் பலரும் பூசித்துப் பேறு பெற்றது. 'புண்டரீகபுரம்' என்றும், "ஆதி சிதம்பரம்" என்றும் எல்லோராலும் போற்றப் பெறுவது.

ஸ்ரீ இராமபிரான் இளமையில் பூணூல் அணியும் மங்கல நிகழ்ச்சி நிகழ்ந்தவுடன் தீர்த்தயாத்திரை தொடங்கி இத்திருத்தலத்திற்கு வந்து ஸ்ரீ நடராசப் பெருமானைத் தரிசித்துத் திருவருள் விளக்கம் பெற்றார். இத்திருத்தலம் ஸ்ரீ இராமபிரான் பல நாட்கள் தங்கிக் கூத்தப் பெருமானைப் பூசித்தமையாலும், முத்திவிருப்பம் உடைய முனிவர்களும், யோகிகளும் எந்த நாளிலும் இருந்து வழிபட்டுக்கொண்டு இருப்பதனாலும் இதற்கு இணையான தலம் இது ஒன்றே" என்று நான்முகக்கடவுள் நாரதருக்குக்கூறினார்.

நாரதர் 'ஆதிசிதம்பரம்' என்னும் திருப்பெயர் அமைந்ததற்குரிய காரணத்தைப் பிரமதேவரிடம் கேட்க

அவர் ''நாரதரே! ஸ்ரீ சிதம்பரத் திருத்தலம் மிக உயர்ந்ததாகவும், பெரும்பாதகங்களையும் நீக்க வல்லதாயும் இருப்பது. அது படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் ஆகிய ஐந்தொழிலையும் செய்யும் திருக்கூத்துச் சிறப்பை உடையது. அவற்றுள் இத் தில்லை வளாகமாகிய ஆதித் திருத்தலத்தில் நிகழ்ந்த திருக்கூத்து மற்றைத் திருத்தலங்களில் செய்யும் திருக்கூத்துகளுக்கெல்லாம் முன்னே நிகழ்ந்து முதற்படைப்பைச் செய்ததாகும் சிவபெருமான் திருநடனம் புரிகின்ற எல்லாத் திருத்தலங்களும் சிதம்பரமேயாம் உயிர்களைப் பற்றியிருக்கிற பாசங்களை நீக்கி முக்தியை வழங்கும் சிவபெருமான் அவரது திருநடனத்தால் அவ்வுயிர்களுக்குப் பிறவிக் கடலினின்றும் நீந்தும் பேருதவியைச் செய்கிறார். அவரது அருள் வெளிப்பாடு நிறைந்த தில்லை வளாகம் எல்லாவற்றிலும் மேன்மையுற்று இருப்பது என்றார்.

நடேசப் பெருமானுக்கு நடனம் ஏற்பட்ட காரணத்தையும், அதன் உட்கருத்தையும் விளக்கியருள வேண்டும் என்று பிரமதேவரை நாரதர் கேட்க அவர் ''அநாதி காலத்தில் ஆணவமல இருளில் அழுந்தி அறிவற்றுக்கிடந்த உயிர்களிடத்துப் பெருங்கருணை கொண்டு அவற்றை உய்விக்க எண்ணி உலகம், உடம்பு உட்கருவி, நுகர்ச்சிப் பொருள்கள் ஆகியவற்றை உயிர்களுக்கு வழங்கி ஊழிக் காலத்தில் அவைகளை மாயையில் ஒடுக்கியும், பின் படைப்பில் ஒடுக்கியபடியே

தோற்றுவித்தும் மாற்றம் மனங்கழிய நின்ற மறை யோனாகிய சிவபெருமான் அருள் புரிந்து கொண்டு இருக்கிறார். அவரது திருவுருவ உண்மை யாராலும் அறிதற்கரியது. சிவபெருமானது விருப்ப வடிவமாக இருப்பவரே சிவகாமசுந்தரி ஆவார். அடியார்க்கு எளியராம் தன்மை அவருக்கு உண்டு ஆதலின் அவர் பல திருத்தலங்களிலும் உயிர்களுக்கு அருள் புரிதல் குறித்த திருக்கூத்தை இயற்றுகிறாராயினும் ஆதிசிதம்பரத் திருத்தலமாகிய தில்லை வளாகத்தில் செய்யும் திருக்கூத்து ஒப்புயர் வற்றதெனப் போற்றப் பெறுகிறது.

நடேசப் பெருமான் வலதுமேற்கையில் உடுக்கையை வைத்து ஒலித்து உயிர்களை ''முத்தி தருகின்றேம்; வாருங்கள்" என்று அழைக்கின்றார். வந்தவர்களுக்கு வலதுகீழ்க் கையால் அபயங்காட்டி, இடத்திருவடியைத் தூக்கி இடது கையால் அதனை 'முத்தித் தானம்' என்று காட்டி, இவையெல்லாம் சத்தியமே என்று தெரிவிக்க இடதுமேற்கையில் அக்கினியைத் தாங்கியிருக்கிறார் என்பதை அறிந்து கொள்வீராக. மேலும் இளமையில் இத்திருத்தலத்திற்கு வந்து வணங்கி இன்புற்ற இராமபிரான் பின்னர் தந்தை சொற்படி வனவாசம் செய்தபோது சீதா பிராட்டியைக் கவர்ந்து சென்ற இராவணனோடும், அவனைச் சார்ந்த அரக்கர்களோடும் போர் புரிந்து அவர்களைக் கொன்று வென்ற பிறகு சிவபூசைச் சிறப்பால் மேம்பட்ட

அரக்கர்களைக் கொன்ற பாவம் இராமரை வந்து வருத்தியது. அவ்வருத்தம் நீங்க இராமபிரான் இராமேசுரத்தில் இராமலிங்கத்தைப் பிரதிட்டை செய்து வழிபட்டும், திருமறைக் காட்டில் வீரகத்தி மோசன விநாயகப்பிரதிட்டை செய்து வழிபட்டும், தில்லைவளாகத்தில் ஸ்ரீ நடேசப் பெருமானை

''தில்வ வனேசாய நம:
ஆதிசிதம்பரேசாயநம:
சிற்சபேசாய நம:
சிருஷ்டியாதி தாண்டவாய நம:
வேதாந்த வேத்தியாய நம:
சித்தாந்தப் பிரகாசாய நம:
பக்தமுத்திப் பிரதாய நம:
பிரணதார்த்த ஹராய நம:
பிராணிபாவ நாசினே நம:
பார்வதி பதயே நம:
சூலபாணனே நம:
கால காலாய நம:
காலாதீதாய நம:
சம்பவே நம:
கபாலமாலா பூஷணாய நம:
காருண்யாமிர்த சிந்தவே நம:''

என்பன ஆதியவற்றால் துதித்து வழிபட்டுத் திருக்கோலக் காட்சியைக் காட்டியருள வேண்டும் என்று பிரார்த்தித்தார்.

அவருடைய பிரார்த்தனையை ஏற்றுச் சிவபெருமான் அவருக்கு உமாதேவியார் உடனாகக் காட்சிகொடுத்து "உனக்கு வேண்டும் வரத்தைக் கேட்பாயாக" என்று திருவாய் மலர்ந்தருளினார். இராமபிரான் "உம்மை இடையீடின்றி வழிபடும் நல் வாய்ப்புடன் இந்தத் திருத்தலத்திலேயே நான் எப்போதும் இருக்க விரும்புகிறேன்" என்று சொல்ல சிவபெருமான் "இராமச்சந்திரனே! உன் ·தம்பி பரதன் உன்பால்வைத்த அன்பினால் அவன் கைக்கு வந்த அரசபோகத்தை விட்டு விட்டு உனக்காக நீ வரும்வரை அரசாட்சியை மேற்கொண்டிருக்கிறான் அவன் விருப்பத்தை நிறைவேற்றி அரசாட்சியைக்கொண்டு குறித்த கால எல்லைவரை கடமையாற்றிப் பின்னர் இங்கு வந்து வழிபாட்டை மேற்கொள்வாயாக" என்று அருள் செய்தார். அதன்படி இராமபிரான் அயோத்திக்குச் சென்று பட்டாபிஷேகம் கொண்டு அரசாட்சி செய்து இறுதியில் தில்லை வளாகத்திற்கு வந்து சீதை, இலக்குமணன், அனுமான் ஆகியவர்களுடன் நடேசப்பெருமானை நித்தியதரிசனம் செய்து கொண்டிருக்கிறார் என்று பிரமதேவர் நாரதமுனிவருக்கு அருள்செய்ததைச் சூதமுனிவர் சனகாதி முனிவர்களுக்குச் சொல்லியருளினார்.

திருச்சிற்றம்பலம்

26035

—